


## உயர்த்துக

பக்கங்களை அதிகப் படுத்தி, சந்தாத் தொகையை உயர்த்தி வார வெளியீடாகச் செய்க.

—வெ. இராமானுசம்–ஆசிரியர்–எடுத்தானூர்.

## இருவிதப்பயன்

கடவுள் இல்லை என்பாருக்கு "உண்டு" என்று நிலைநாட்டியும். கடவுள் உண்டு என்பாருக்கு மேன்மேலும் தெளிவு கூட்டியும் வரும் "அருளோசை"யின் பணி வளர்க.

—எ. ஜெயராமன், சிவகுருநாதபுரம்.

## இந்து மதத்திற்கே

சைவ சமயத்திற்கு மட்டுமன்றி இந்து மதத்திற்கே ஒளிவிளக்காக இருப்பதை யாரும் பாராட்டாமல் இருக்க முடியாது.

—மு. விஜயன், (கைதி எண். 42212) மத்தியசிறை, வேலூர்.

## திருத்தொண்டு

'சிவபுராணம்' இலவச வெயீடு வேண்டுவோர் 20 காசு தபால் தலை அனுப்பினல் அனுப்பி வைக்கிறேன்.

—வை. ஆறுமுகம், நாவுக்கரசர் நற்பணி மன்றம்

பொன்னுசாமி முதலி தெரு, பண்ருட்டி, தென் ஆர்க்காடு மாவட்டம்.

## ஒவ்வொருவரும்

ஒவ்வொரு இந்துவும் தவருமல் "அருளோசை" படிக்க வேண்டுகிறேன்.

—மு. சரவணன், மண்டபம்.

## இணைக்கவும்

கேள்வி பதில் பகுதி இணைக்கவும்.

—சா. முருகேசன், ஆசிரியர், எ குரவங்குப்பம்.

## பதினோராந்திருமுறை

ஒவ்வோர் இதழிலும் பதினோராந் திருமுறைப் பாடல் ஒன்றை உரையுடன் வெளியிடுக.

—வி. எம் இராமகிருஷ்ணன், திருவாடானை.

## என்றும் தழைத் தோங்குக

பயனுள்ள கட்டுரைகளைத் தன்னகத்தே கொண்டு விளங்கும் "அருளோசை" என்றும் தழைத் தோங்குக!

—புலவர், சிக்கல், சி. ஜானகிராமன்—சிக்கல்

## வாழ்த்துக்கள்

பிறந்த நாள் கொண்டாடும் "அருளோசைக்கு" நல்வாழ்த்துக்கள்

—சு. முருகேசன், பணிக்க நாடார் குடியிருப்பு.

## என்றும் புகழுடன்

அன்பர் நெஞ்சகத்துக்கு ஊக்கம் காட்டி விழிப்பூட்டும் "அருளோசை" என்றும் புகழுடன் ஓங்குக!

# அறிவிப்பு

—:o:—

தற்போது அருளோசையின் சந்தாத் தொகை ரூ. 3-லிருந்து ரூ. 5-ஆக உயர்த்தப்பட்டிருப்பதால் தாங்கள் 'அருளோசை' இதழை 1974-ஜூன் முடிய பெறவிரும்பினால்

கீழ்க்கண்டவாறு தொகை செலுத்த வேண்டுகிறோம்.

| | | தற்போது செலுத்த வேண்டிய தொகை. ரூ | பை. |
|---|---|---|---|
| 1972 ஜூலை & ஆகஸ்டு | இதழிலிருந்து பெற்று கொண்டவர்கள் | 5 | 00 |
| 1972 செப்டம்பர் | ,, ,, | 4 | 50 |
| 1972 அக்டோபர் | ,, ,, | 4 | 25 |
| 1972 நவம்பர் | ,, ,, | 4 | 00 |
| 1972 டிசம்பர் | ,, ,, | 3 | 75 |
| 1973 ஜனவரி | ,, ,, | 3 | 50 |
| 1973 பிப்ரவரி | ,, ,, | 3 | 25 |
| 1973 மார்ச்சு | ,, ,, | 3 | 00 |
| 1973 ஏப்ரல் | ,, ,, | 2 | 75 |
| 1973 மே | ,, ,, | 2 | 50 |
| 1973 ஜூன் | ,, ,, | 2 | 25 |

மேற்கண்டவாறு தொகையை மணியார்டர் மூலம் செலுத்தினால் தங்களுக்கு 1974 ஜூலை முடிய இதழ்கள் அனுப்பப்பெறும்.

மணியார்டர் அனுப்பும்போது தங்கள் சந்தா எண்ணைத் தவறாது குறிப்பிடவும்.

மேலும், இந்த இதழ் முதல் டாக்டர். சொ. சிங்கார வேலன், எம்.ஏ., பிஎச்.டி அவர்கள் எழுதும் "சந்தானகுரவர் வரலாறு" தொடர்கட்டுரையாக வெளிவருகிறது. இக்கட்டுரைகளை யெல்லாம் பின்னால் ஒன்று சேர்த்து புத்தகமாக்கிக் கொள்ளும் வகையில் தனிப் பகுதியாக அச்சிடப்பெறுகிறது.

அ. நாராயணசுவாமி, பி.ஏ.,
பதிப்பாசிரியர்.

## இந்த இதழில்



மேல் அட்டைப்படம் புதுவை பிரஞ்சு இந்திய கழகத்தின் (French Institute of Indology) உரிமை பெற்றது.

# "அருளோசை"

## வினா விடைப் பகுதி—ஜூன்-73

## பரிசு பெற்றவர்கள்

முதல் பரிசு: திரு. கி. சுப்பராமன், சென்னை-1, சந்தா எண் 846.

இரண்டாம் பரிசு: திரு. ந. கருப்பையா, திருமழபாடி திருச்சிராப்பள்ளி மாவட்டம், சந்தா எண் 1243.

மூன்றும் பரிசு: திரு. கே. ஆர். கிருஷ்ணமூர்த்தி, கூடலையாற்றூர், தென்னார்க்காடு மாவட்டம், சந்தா எண் 689.

நான்காம் பரிசு: திரு. அ. மகாலிங்கம், திருமழபாடி, திருச்சிராப்பள்ளி மாவட்டம், சந்தா எண் 353.

முக்கிய அறிவிப்பு: 'அருளோசை' முதலாண்டின் பன்னிரண்டு இதழ்களிலும் எழுதி வினாவிடைகளில் பரிசு பெற்றவர்களின் பட்டியல் அடுத்த இதழில் வெளிவரும்.

—பதிப்பாசிரியர்

சமணசமய ஒழுக்க நியதிகளின்படி கேவல ஞான மெய்திய பரிபூரண மனிதனைக் கடவுள் நிலைக்கு உயர்த்திக் கடவுளாகவே ஆக்கி வழிபடுகின்றனர்.

இவ்வுலகில் காணப்பெறும் ஒவ்வொரு பொருளும் அவ்வப் பொருளில் உள்ள குணவியல்புகளாலேயே ஆயது. நாம் அந்தப் பொருளை, அந்தப் பொருளின் குணங்களைக் கொண்டே அறிந்து உணர்கின்றோம் என்பது கருத்து. ஆனால், ஒவ்வொரு பொருளும் அதனிடத்துள்ள குணங்களால் மட்டுமின்றி அதனிடத்தில் இல்லாத தன்மைகளாலும் ஆயது. ஒரு பொருளை உள்ளவாறு அறிய அதனுடைய குணங்களோ டன்றி அதனிடத்தில் இல்லாத தன்மைகளும் கூடத் துணை செய்கின்றன என்பது சமணர் கருத்து. இதனால் ஒரு பொருளைச் சில உடன்பாட்டுத் தன்மைகளும், எதிர்மறைத் தன்மைகளும் சேர்ந்தே ஆக்குகின்றன என்பது அறியக் கிடக்கிறது. ஒரு மனிதன் அவனாவதற்கு அவனல்லாத பிறவும் துணை செய்கின்றன. அவனிடத்து உள்ளனவும் அவனிடத்து இல்லாதனவும் சேர்ந்தே அவன் உருவா கின்றான்.

ஒரு பொருளைப்பற்றி இப்படித்தான் என்று முடிவான கருத்தாகக் கூறுவதைச் சமணர் உடன்படுவதில்லை. அங்ஙனம் இருக்கலாம் என்ற பொருள்படும் சியாத் வாதத் திற்குச் சமணம் பேர்போனது. எந்தப் பொருளைப்பற்றியும் எந்த ஒரு முடிவும் முடிவானதல்ல என்பதே சமணர் கொள்கை. அதனாலேயே சமணர் கொள்கையை அனே கானந்தவாதம் என்றும் கூறுவதுண்டு. சமணர் பல்வேறு முடிவுகளை எழுவகைப்படுத்தி அடக்குவர். பொதுவாகச் சமணர் இவ்வுலகத்தின் மூலம் முரண்பட்டதும் முரண்படாதது மான பல்வேறு இயல்புகளைத் தனக்கு இலக்கணமாகவுடை யது. அதைப்பற்றி மனிதன் அறியும் அறிவு குறைவுடையதே அல்லது ஒரு பகுதியே. அந்த அறிவு ஒருபொழுதும் முற்றறிவு அல்ல, சீலத்தாலும் நோன்பாலும் வளர்ந்த கேவல ஞானியே பூரண ஞானமுடையவன். அதுமட்டுமா? சமணர்க்குத் தத்துவ வகையிலிருக்கும் ஒரே சிறப்பு, பிற தத்துவஞானிகள் கண்டுகாட்டும் முடிவுகளிலும் உண்மை யிருக்கும் என்று ஏற்கும் பரந்த மனப்பான்மையாகும். தம்




## மனத்தில் வளம் குறைவாக இருக்குமானல் வளம் சேர்க்கும் கல்வி

மனிதனுக்கு இயற்கை துணை செய்வதைப் போல வேறு எதுவும் துணை செய்வதில்லை. மனிதன் இயல்பில் குறையுடையவனக இருக்கிருன். ஆனல், அவனுடைய குறையை நிறை செய்ய பலப்பல வழிகளை இயற்கை அளித்திருக்கிறது. ஐம்பொறிகள் குறைவை நிறைவு செய்யும் வாயில்களேயாம். ஆனல். பலர் அறியாமையின் காரணமாக, பொறிகளைக் குற்றவழிப்படுத்துகின்றனர்; நிறை அழிகின்றனர். ஐம்பொறிகளும் அறிவின் வாயில்கள். ஒரோவழி, தொடர்ந்து வாழும் உயிர்க்கு ஏற்படும் களைப்பை மாற்றுவதற்காகக் களிப்பினை நுகரும் வாயில்களாகவும் பொறிகளை இயற்கை அமைத்துத் தந்தது. அதுமட்டுமன்று. பொறிகளால் மட்டுமே துய்க்கப்படும் இன்பம் அல்லது களிப்பு செழுமையானது அல்ல. பொறிகள் வாயிலாகப் புலன்களுக்குச் சென்று துய்க்கும் உணர்வினைத் தரப்படுத்தித் துய்க்கும் பொழுது மகிழ்வு, இன்ப மகிழ்வு ஆகிறது. அத்தகைய மகிழ்வு உயிர்க்கு ஆக்கம் சேர்க்கிறது. இன்ப அன்பிற்கு வாயிலாக அமைகிறது. ‘ஐம்புலன்கள் ஆர’ என்பார் மாணிக்கவாசகர். இத்தகைய துய்ப்பில் உடல் வலிவு பெறுகிறது; வனப்புப் பெறுகிறது. உயிர்க்குரிய குறையை நிறைவு செய்யும் வாயிலில் முதன்மையானது கல்வி. உடலுறுதிக்கு உணவும், உயிர் உறுதிக்குக் கல்வியும் இன்றியமையாதன. ரோமாபுரிப் பேரரசன் ஒருவன் தன்னுடைய நூலகத்தின் வாயிலில் “உயிர் மருந்து நிலையம்” என்று பெயர் எழுதி அமைத்தனன். உடலுக்குப் பசி ஒருவகைப் பிணியேயாம். தமிழ் இலக்கிய உலகம் “பசிப்பிணி என்றே கூறும். உடற்பசிக்கு உணவளிப்பவனை “பசிப்பிணி மருத்துவன்” என்று புறநானூறு வாழ்த்தும். அதுபோல வாழும் உயிர்க்கு அறிவுப்பசி இருத்தல் வேண்டும். இந்தப்பசிக்குரிய கல்வியை வழங்குபவனை ஆருயிர் மருத்துவன் எனல் மிகையன்று.




## நம்பியாரூரர்

க. கல்யாணம், எம்.ஏ., டிப். எக்கான்.,

திருக்கயிலாய மலையின் அடிவாரத்தில் உபமன்னியமுனிவர் மற்ற யோகியர்புடைசூழ அமர்ந்திருந்தார். அப்போது ஆயிரம் பகலவனின் பேரொளி போன்று தோன்றிற்று. சூழ்ந்திருந்தோர் "இஃதென்ன அதிசயம்" என்று வியந்தனர். "நாவலர்கோன் வருகிறான்" என்று சொல்லி முனிபுங்கவர் எழுந்து திசை நோக்கி வணங்கினார். அங்குள்ளோர் "சிவபெருமான் திருவடியன்றி வேறொன்றையும் தொழாத தாங்கள் இவ்வாறு செய்யக் காரணம் என்ன?" என வினவினர். "சிவபெருமானைத் தன்உள்ளத்தில் நிறுத்தியவன்; நம்பியாரூரன் நாம் தொழும் தன்மையுடையவன்" என்று உபமன்னியர் கூறினார். "அப்படியானால் அவர் வரலாற்றைக் கேட்கும் விருப்பமுடையோம்" என்று மற்ற முனிவர்கள் விண்ணப்பித்தனர். ஆலாலசுந்தரர் வரலாற்றைச் சொல்லத் தொடங்கினார் முனிவர் தலைவர். இவ்வாறு தொடங்குகிறது பெரியபுராணம். கடைசி நிகழ்ச்சியை வைத்துக் கதையை முதலிலிருந்து கூறியிருக்கும் அழகு சேக்கிழார் கையாண்ட தனிச்சிறப்புடையது. பிற்காலத்தே இம்முறையைத்தான் ஆங்கிலத்தில் Flash back என்று கூறுகின்றனர்.

சைவ சமயத்தின் சிறந்த குறிக்கோள் பிறவாமை வேண்டும் என்பதே. ஆனால் சேக்கிழாரடிகள் சுந்தரரைப் பற்றிப் பேசும் பெரும் பேறுவாய்க்கப்பெற்ற பிறப்பிற்கே வணக்கம் செலுத்துகிறார், "தேசமுய்யத் திருத்தொண்டத் தொகை முன் பணித்த திருவாளன் வாச மலர் மென் கழல் வணங்க வந்த பிறப்பை வணங்குவாம்" என்பது அவர் திருவாக்கு. குன்றை முனிவர் தம் திருவருட் காவியத்திற்குச் சுந்தரரையே தலைவராக்குகிறார். "சைவமுதல் திருத்தொண்டர் தம்பிரான் தோழனார் நம்பி" என்றும், "மூலமான திருத்தொண்டத் தொகைக்கு முதல்வராய் இந்த ஞாலம் உய்ய எழுந்தருளும் நம்பிதம்பிரான் தோழர்" என்றும் அவரே போற்றிப் புகழ்கிறார். திருத்தொண்டர் புராணத்தில் நம்பியாரூரர் வரலாற்றை முதலிலும் இடையிலும் முடிவிலும் அமைத்திருக்கிறார். திருமலைச் சிறப்பு-40, தடுத்தாட் கொண்ட புராணம்-203, ஏயர்கோன்கலிக்காம நாயனார்-409, கழறிற்றறிவார்-175, வெள்ளானைச் சருக்கம்-53 ஆகிய பகுதிகளில் 880 செய்யுட்களில் சுந்தரர் வரலாற்று நிகழ்ச்சிகளைக் கூறியிருக்கிறார்.

# சமயபோதனை

பாடம் 13 விஞக்கள் ஜூலை 1973.

விஞக்கள் இந்த இதழ்க் கட்டுரைகள் பற்றியனவும் சமய அறிவுத் தொடர்பானவையும் ஆகும். விடைகளை முழு அளவு (Foolscap size) இரண்டு தனித் தாள்களில் நான்கு பக்கங்களுக்குள் எழுதி இவ்வலுவலகத்திற்கு 31-7-1973க்குள் கிடைக்கும்படி அனுப்பிவைக்க வேண்டும். சந்தா எண், பெயர், வயது, முகவரி இவற்றைத் தெளிவாக எழுதியனுப்ப வேண்டும்.

மதிப்பெண் சமம்] [மதிப்பெண் 100

1. உலகத் தோற்றத்தைப் பற்றி சமணர் கொள்கை என்ன ?
2. பசிப்பிணி மருத்துவன், உயிர்ப்பிணி மருத்துவன், உயிர்மருந்து நிலயம்-குறிப்புக்கள் வரைக.
3. சுந்தரர் நிகழ்த்திய அற்புதங்களுக்கு அவர் அருளிய தேவாரப் பாடல்களிலிருந்து அகச்சான்றுகள் தருக.
4. வேதாந்த தேசிகர் இயற்றியருளிய வடமொழி, தமிழ்மொழி நூல்கள் எவை?
5. பகுப்புவழி அளவை, தொகுப்புவழி அளவை-எடுத்துக்காட்டுகளுடன் விளக்குக.
6. சந்தான குரவர் யார்? சந்தான குரவர் என்ற பெயர் வரக் காரணமென்ன?
7. இறைவனுக்கு ஆட்டும் திருமஞ்சனப் பொருள்கள் எவை?
8. காவிரியாற்றின் பெருமையைப் பற்றிச் சுருக்கி எழுதுக.
9. சமயச் சின்னங்கள் எவை? அவற்றை அணிவதெப்படி?
10. நீங்கள் வழிபட்ட ஒரு முருகன் தலத்தைப் பற்றி எழுதுக.

---

விடைகளை எழுதி உரிய அஞ்சல் தலைகளையொட்டிக் கீழ்க்காணும் முகவரிக்கு அனுப்ப வேண்டும் :—

"அருளோசை"
தமிழ்நாடு தெய்விகப் பேரவை,
நெ. 9, மகாராஜா சூரியராவ் சாலை,
ஆழ்வார்பேட்டை, சென்னை-600018

யில் முதலையுண்ட மதலையை உயிருடன் திரும்பஅழைத்தார். திருவஞ்சைக்களம் சேர்ந்தார். இறைவன் அனுப்பிய வெள்ளையானை மேல் திருத்கயிலாயத்தை யடைந்தார். சேரமான் பெருமாளும் குதிரையில் ஏறி அவருடன் சென்றார்.

சுந்தரர் மனிதனக உலகத்தில் வாழ்ந்தவர். சொந்த வாழ்க்கையின் அனுபவங்களை அவருடைய பாடல்களில் சொல்கிறார். உலக வாழ்க்கையில்-இல்லறத்தில் இருந்து கொண்டு இறைவனை எப்படி அடையலாம் என்பது அவர் வரலாற்றால் அறிந்து கொள்ளப் பெறும் பேருண்மை. அவர் வரலாற்று நிகழ்ச்சிகளுக்கு அவருடைய தேவாரப் பாடல்களில் நிறைய அகச்சான்றுகள் உள்ளன. 38000 பதிகங்கள் பாடியதாகக் கூறுவர். ஆனல் நமக்குக் கிடைத்திருப்பன 100 பதிகங்களிலுள்ள 1026 பாசுரங்களே. அவர் வாழ்ந்த காலம் கி.பி. 9-ஆம் நூற்றாண்டு. அவர் திருக்கயிலைக்குச் சென்றது கி.பி. 825 என்பது சிலர் கருத்து

சேக்கிழார் "நம்பியாரூரர் என்றே நாமமும் சாத்தி" என்று கூறுவதால் அவர் திருப்பெயர் நம்பியாரூரர் என்பதே. பெரியபுராணத்தில் சுந்தரர் என்ற பெயர் எங்கும் காணப்பெறவில்லை. தேவாரப் பாடல்களிலும் அவர் தம் பெயரை சுந்தரர் என்று கூறவில்லை. நாவலூராளி, நாவலர்கோன், நம்பியாரூரன், ஆரூரன், ஊரன், வன்றொண்டன் என்றே கூறிக்கொள்கிறார். எனவே சுந்தரர் என்பது பிற்காலத்தில் எழுந்த பெயர். கோயில்களிலுள்ள சோழ மன்னர் கல்வெட்டுக்களில் வன்றொண்டன், ஆளுடைய நம்பிகள், திருத்தொண்டத்தொகையான் என்ற பெயர்கள் காணப்பெறுகின்றன. சிவபெருமான் ஓலைகாட்டி ஆட்கொண்டதை "அன்று வந்தெனை அகலிடத்தவர் முன் ஆளதாக என்று ஆவணங்காட்டி" என்றும், இறைவனைத் தோழமை கொண்டதை "ஏழிசையாய் இசைப் பயனாய்...என்னுடைய தோழனுமாய்" என்றும், பெருமான் பரவைக்குத் தூது சென்றதை "அடியேற்கெளிவந்த தூதனை" என்றும், பரவை சங்கிலியார் இருவரையும் மனைவியராகப் பெற்றதை "பண்மயத்தமொழிப்பரவை சங்கிலிக்கும் எனக்கும் பற்றாய பெருமானே" என்றும், கண் இழந்ததை "சங்கிலிக்கா வென்கண் கொண்ட பண்ப" என்றும், அவிநாசியில் முதலையுண்ட மதலையை யழைத்ததை "கரைக்கான் முதலையைப்பிள்ளை தரச் சொல்லு காலனையே" என்றும், திருக்கயிலைக்குச்செல்ல வெள்ளையானை பெற்றதை "வானெனை வந்தெதிர் கொள்ளமத்தயானை அருள் புரிந்து" என்றும் கூறியிருக்கிறார்.

"வாழ்வாவது மாயம் மண்ணாவது திண்ணம்", "தோற்றமுண்டேல் மரணமுண்டு", "இன்பமுண்டேல் துன்பமுண்டு ஏழை மனை வாழ்க்கை", "சொல்லிடில் எல்லையில்லை சுவையிலாப் பேதை வாழ்வு" "ஓறு புனற் கரையாம் இவ்விளமை உறங்கி விழித்தால் ஒக்கும் இப்பிறவி" என்பன போன்றவை அவர் பாடல்களில் காணப்பெறும் பழமொழிகள்.

சுந்தரமூர்த்தி சுவாமிகளின் திருநட்சத்திரமான ஆடிச்சுவாதி 5-8-1973 அன்று வருகிறது. நாம் அவர் பாடல்களை ஓதி உய்வோமாக.

"பித்தரிறை என்றறிந்து பேதை பால் தூது அனுப்பு
வித்த தமிழ்ச்சமர்த்தர் மெய்புகழ்வதெந்நாளோ"—தாயுமானவர்.

வேதாந்த தேசிகரும் அப்பிள்ளார் என்கிற அந்தப் பேராசிரியரிடம் வேதம், உபநிடதம், திவ்வியப்பிரபந்தம் முதலான எல்லா நூல்களையும் குறையறக் கற்றுப் பேரறிஞராய்த் திகழ்ந்தார். உரிய பருவத்தில் தேசிகரும் பெரியோர்கள் கட்டளைப்படி திருமங்கையார் என்கிற நங்கையைத் திருமணம் செய்து கொண்டு கச்சியம்பதியிலே இனிது வாழ்ந்து வந்தார்.

இவ்விதம் சில தினங்கள் சென்றவுடன் அப்பிள்ளாரும் தூப்புல் பிள்ளையாகிய தேசிகருடைய அறிவாற்றல் இவ்வுலகுக்குப் பயன்பட வேண்டுமென்று கருதி இவருக்குப் பெரிய திருவடியாகிய கருடாழ்வானுடைய அருள் கிடைக்கும்படி மறைமொழியான அந்த கருடமந்திரத்தை உபதேசம் செய்தார். மற்றும் தொன்மையாகத் தமக்குக் குருவழியாகக் கிடைத்த சில மந்திரங்களையும் அருளினார். தேசிகரும் அந்த உபதேச மொழிகளை மிகவும் பக்தியுடன் கேட்டு, அப்படியே உள்ளத்தில் தேக்கி அந்த மந்திரங்களை அடிக்கடி மனனம் செய்து அதனால் வேதத்தையே சரீரமாகக் கொண்டவனும், அறிவே வடிவாயிருப்பவனுமான கருடனுடைய பேரருளைப் பெறவேண்டுமென்று விரும்பினார். அம்மந்திர மொழிகளை ஒரு தனியிடத்தில் அமர்ந்து தியானிக்க வேண்டுமென்று கருதி அதற்கு ஏற்ற இடத்தை ஆலோசிக்கலானார். அப்போது "அடியவர்க்கு மெய்யனாகிய தெய்வ நாயகன்" என்று திருமங்கையாழ்வாராலே கொண்டாடப் பட்ட தேவநாதன் எழுந்தருளியுள்ள திருவகிந்திரபுரத்தில் மிகவும் புகழ்வாய்ந்ததான ஔடதமலை இருப்பதையறிந்து அவ்வூருக்குச் சென்று அங்குபாயும் கருடநதியில் நீராடி, செங்கமல நாச்சியாரையும், தெய்வ நாயகனையும் திருவடி தொழுது ஔடதகிரி என்னும் மூலிகைமலையேறி அங்குள்ள நரசிங்க மூர்த்தியையும் வணங்கிப் பின்பு ஒரு அசுவத்த மரத்தின் கீழே அமர்ந்து கருடமந்திரத்தை இடைவிடாமல் சொல்லி மோன வழிபாட்டிலிருந்தார். அதனால் பெரிதும் மகிழ்ந்த கருடபகவான் அவர் முன்னே தோன்றி அருள் பாலித்துப் பின்பு மிகவும் உயர்ந்ததான பரிமுகமந்திரத்தை (ஹயக்ரீவ மந்திரம்) அவருக்கு உபதேசித்தார். பரிமுக மந்திரம் உபதேசம் பெற்றவுடனே அம்மந்திரத்தை மிகவும் பக்தியோடு மனனம் பண்ணி, அதனால் ஞானக் கடலான பரிமுகக் கடவுளின் பேரருளைப் பெற்று உலகமே போற்றும் உத்தம ஞான சீலராய் தேசிகர் திகழ்ந்தார்.

அப்போது "பன்னுகலை நால்வேதப் பொருளையெல்லாம் பரிமுகமாயருளிய வெம்பரமன் காண்மின்" என்கிறபடியே எல்லா கலைகளுக்கும் அதிதேவதையான பரிமுகக் கடவுளும் இவர்முன்னே எழுந்தருளி இவருக்குத் தம்வாக்கு வன்மையாகிற அமுதத்தைக் கொடுத்தருளினார். அதனால் பெரிதும் நாவீறு பெற்ற இவர் 'அயக்கிரீவத்துதி' என்ற தோத்திர நூலையும், அயக்கிரீவ மந்திர உபதேசம் செய்த கருட பகவான் மீது 'கருடபஞ்சாசது' என்கிற நூலையும் இயற்றிப் போற்றினார். அதன் பிறகு தெய்வநாயகன், செங்கமலவல்லித் தாயார் பேரில் அச்சுதசதகம் என்ற வடமொழி நூலையும் செந்தமிழாலே மும்மணிக்கோவை, பந்து, கழல், அம்மானை, ஊசல், ஏசல், முதலிய பாடல்களையும், நவமணிமாலை என்ற நூலையும் இயற்றியருளினார். மற்றும் பிற சமயவாதங்களைக் கண்டித்து பரமதபங்கம் என்ற வடமொழி நூலையும் இயற்றினார்.

இவ்விதம் சில திங்கள் கழிந்தவாறே திவ்வியத் தலயாத்திரை செய்யவேண்டுமென்று விருப்பங் கொண்ட இவர் திருக்கோவலூரை அடைந்து அங்கு கோயில் கொண்டுள்ள கோவலூர் ஆயனாரைப் பாடிப்

அனுப்பிவிட்டார். இவ்விதம் உலகியலிலும், அழிதன்மாலையதான செல்வங்களிலும் சிறிதும் பற்றின்றி மிக்க வைராக்கியத்தோடு வாழ்ந்த தேசிகர் பின்பு தென்னாடும் வடநாடும் தொழ நின்ற திருவரங்கம் சென்று மாயாவாதிகளை வென்று அரங்கன் செய்யதாளிணைகளை வணங்கி வந்தார். அப்போது அங்கிருந்த பெரிய ஆசாரிய புருடர்கள் எல்லாம் தேசிகனை அடிபணிந்து அருமறைப் பொருளைக் கேட்டு மகிழ்ந்தனர். அப்பொழுதுதான் அத்துவைதக் கண்டனமான "சததூடணி" என்ற நூலை தேசிகர் இயற்றினார். அதனால் மகிழ்ந்த அரங்கன் அவருக்கு "வேதாந்தாசாரியர்" என்ற விருதுப் பெயரை வழங்கினார். திருவரங்கத்தில் இவ்விதம் இராமாநுசருடைய கொள்கைகளை விளக்கமாகப் பலரும் ஏற்கும் வண்ணம் உபதேசம் செய்து வந்த தேசிகர், இங்கு இறைவனின் பத்து அவதாரங்களையும் விளக்கிப் பேசக்கூடிய 'தசாவதாரத் தோத்திரம்' என்ற நூலையும் இயற்றினார். பின்பு மீண்டும் தெய்வநாயகனை வழிபடவேண்டும் என்ற ஆருத வேட்கையால் திருவகீந்திரபுரத்திற்கு வந்து சில காலம் வாழ்ந்தார். அப்போது மற்ற சமயத்தவர்களெல்லோரும் ஒன்றாகக் கூடி வேதாந்ததேசிகரோடு வாதப்போர் செய்ய வந்தனர். இவ்விதம் வந்த பதினெட்டு மதத்தினரையும் தேசிகர் இறையருளால் வென்று இராமாநுச சித்தாந்தத்தை நிலைநாட்டினார், இவருடைய பல்கலைப் புலமையைப் பாராட்டி இவருக்கு தெய்வநாயகன் அந்த அவையிலிருந்த முதியவரின் வாயிலாக 'கவி தார்க்கிக சிங்கம்" என்ற விருதுப் பெயரை வழங்கினார். தேசிகரும் இராமாயண காவியத்தில் மிகவும் ஊற்றங் கொண்டு இராம காதையைப் படித்து அந்தக் கோயிலில் எழுந்தருளியிருந்த இராமபிரானை வணங்கி 'இரகுவீர கத்தியம்' என்ற அழகிய நூலை இயற்றினார்.

வேதாந்த தேசிகர் கோதை நாச்சியாராகிய ஆண்டாளுடைய பிரபந்தங்களில் ஈடுபட்டு 'கோதைதுதி' என்ற நூலையும், 'சங்கல்ப சூர்யோதயம், யாதவாப்யுதயம், பாதுகா சகச்சிரம்' முதலிய வடமொழி நாடக, காவிய, கத்திய நூல்களை இயற்றி இவ்வுலகை வாழ்வித்தார்கள். வேதாந்த தேசிகர் இவ்வுலகில் வாழ்ந்த காலத்தில், தமிழ்மொழி வடமொழி ஆகிய இருமொழிகளிலும் மிகுந்த புலமை கொண்டு எண்ணற்ற நூல்களையும் இயற்றி மிக்க வைராக்கியத்தோடு இவ்வுலக இன்பங்களிலும், மாயைகளிலும் மனம் வைக்காமல் பக்தியை மக்களுக்கு போதித்து இறைவழிபாட்டை உபதேசித்துத் தாமும் கடைப் பிடித்தார். இவரைப் பெரியோர்கள் போற்றிய வழியில் நாமும் போற்றுவோமாக,

நானிலமும் தான்வாழ நான்மறைகள் தாம்வாழ
மாநகரில் மாறன்மறை வாழ—ஞானியர்கள்
சென்னிஅடி(ணி) சேர் தூப்புல் வேதாந்த தேசிகனே
இன்னமொரு(மோர்) நூற்றாண் டிரும்.

செயலுக்குத் தூண்டுவதும், செயலைப் பயனுடைய தாக்குவதும் பத்திமை யுணர்ச்சியே யாகும். பத்திமை யுணர்ச்சிகளை வளர்க்கும் ஆற்றல் திருமுறைகளுக்கே உண்டு.

—தவத்திரு. குன்றக்குடி அடிகளார்.

உ

திருச்சிற்றம்பலம்

திருவருட்பா

வான்கலந்த மாணிக்க
வாசக நின்வாசகத்தை
நான்கலந்து பாடுங்கால்
நற்கருப்பஞ் சாற்றினிலே
தேன்கலந்து பால்கலந்து
செழுங்கனித்தீஞ் சுவைகலந்து
ஊன்கலந்து உயிர்கலந்து
உவட்டாமல் இனிப்பதுவே

—வள்ளலார்.

* * *



Edited, Printed at Peravai Achakam and Published by A. Narayanaswamy. B. A., for the Tamil Nadu Deivika Peravai at No. 9, Maharaja Surya Rao Road, Alwarpet, Madras-600018.

அளவையின் இருபிரிவுகள் :

அளவையியலில் இருவகை முறைகள் காணப்பெறுகின்றன

(1) பொது உண்மையிலிருந்து தனி உண்மையைக் காணும்முறை

எடுத்துக் காட்டு

எல்லா மனிதர்களும் இறப்பவர்கள் ஆவர்
சாத்தன் மனிதன்
எனவே சாத்தன் இறப்பவன் ஆவன்.

மேலே குறிப்பிட்ட எடுத்துக் காட்டில், முதல் இரண்டு வரிகள் முன்னமேயே ஒத்துக் கொள்ளப் பெற்ற முடிவுகள். மூன்ருவது வரியே நமக்குக் கிடைக்கும் உண்மை. முதல் இரண்டு வரிகளில் உள்ள இணைப்புத்தான் மூன்ருவது வரியை நமக்குத் தரும் வல்லமையுடைய தாக அமைகிறது.

'எல்லா மனிதர்களும் இறப்பவர்கள் ஆவர்' என்ற பொது உண்மை யில் 'சாத்தன் இறப்பான்' என்ற உண்மையும் அடங்கிய ஒன்றே. எனவே முதலில் எடுத்துக் கொண்ட உண்மையில் அடங்கியிருக்கிற, அதிலிருந்து பகுத்து- பிரித்து எடுக்கப் பெற்ற உண்மை ஆகையால் இத்தகைய முறையைப் 'பகுப்பு அளவை' என்று பெயரிடுகிறது அளவையியல்.

பகுப்புவழி அளவை முறையில் நாம் காணுவது எல்லாம் சிந்தனைக்கு ஒரு வடிவம் கொடுத்து, சித்தனையிலிருந்து வெளிப்படும் தீர்ப்பையும் வடிவநிலையில் ஒத்துப் பார்க்கிருேம். இங்கே ஒரு வேறு பாட்டைத் தெரிந்து கொள்ளுதல் வேண்டும். வடிவ நிலைக்கு ஒத்திருக்கும் ஒன்று பொருள் நிலைக்கு அல்லது உண்மை நிலைக்கு மாருக அமைவதும்உண்டு.

எடுத்துக் காட்டு

மனிதன் இறவாதவன்
சாத்தன் மனிதன்
எனவே சாத்தன் இறவாதவன்.

இந்த எடுத்துக் காட்டில், சாத்தன் இறவாதவன் என்பது உண்மைக்குப் புறம்பானது. எனவே, தீர்ப்பு உண்மையற்றது; பொருட் பொருத்தம் இல்லாதது. எனினும் வடிவ நிலைப் பொருத்தம் இந்த எடுத்துக் காட்டில் உண்டு. இவ்வகையில் பகுப்புவழி அளவையின் பணி, வடிவநிலை ஒத்திருக்கிறதா? என்பன ஆய்வது தான். வடிவநிலைப் பொருத்தம் (Formal Consistency), வடிவநிலையில் ஏற்புடைமை என்பது தான் பகுப்புவழி அளவையின் உயிர்நாடி.

(2) தனி உண்மைகளிலிருந்து பொது உண்மையைக்காணும் முறை.

எடுத்துக் காட்டு

சாத்தன் மனிதன் அவன் இறந்தான்
தேவதத்தன் மனிதன் அவன் இறந்தான்
கொற்றன் மனிதன் அவன் இறந்தான்
இவ்வாறு மனிதர்கள் பலர் இறந்துள்ளனர்
எனவே, மனிதர்கள் அனைவரும் இறப்பவர் ஆவர்.

மேலே குறிப்பிடப் பெற்ற எடுத்துக் காட்டில், பல தனிப்பட்ட அனுபவ உண்மைகளை அடிப்படையாக வைத்துக் கொண்டு ஒரு பொது உண்மைக்கு வருகிறோம் என்பதைக் காணலாம். பல தனிப்பட்ட தீர்ப்புக்கள் அனுபவ உண்மைகளாக இருக்கின்றன என்ற அடிப்படையில் ஒரு பொதுத் தீர்ப்பை உண்மையாக இருக்கும் என ஒத்துக் கொள்கிறோம். தனி உண்மைகளை வைத்துக் கொண்டு பொது உண்மையை வரையறுப்பதால் இத்தகைய முறையைத் தொகுப்புவழி அளவை என்று பெயரிடுகிறது அளவையியல்.

தொகுப்புவழி அளவை முறையில், நம்முடைய சிந்தனையானது தனி உண்மைகளிலிருந்தும் ஒரு பொது உண்மைக்கு இயல்பாகத் தாவுகிறது. நம் சிந்தனை எப்படித் தாவுகிறது என்பதற்கு வடிவம் அமைத்துக் காட்டுவதைத் தொகுப்பு வழி அளவை நமக்குத் தருகிறது. வடிவநிலைப் பொருத்தத்தை மட்டுமே ஆராயும் பகுப்புவழி முறையைவிட இது பொருட் பொருத்தத்தையும் கவனிக்கிறது. பொருட் பொருத்தம் (Material Consistency) தொகுப்புவழி அளவையின் உயிர்நாடி.

விஞ்ஞானத் துறைகள் புதிய உண்மைகளைக் கண்டு பிடிப்பதற்குக் கையாளப் பெறும் முறை இத்தொகுப்பு வழி முறைதான். இறந்தகால அனுபவ உண்மைகளிலிருந்து, எதிர்கால அனுவத்துக்குரிய உண்மைகளை முடிவு செய்கிறோம். இத்தகைய முடிவுகள் ஒருவேளை எதிர்காலத்தில் உண்மைக்குப் புறம்பானவையாக அமையவும் நேரிடலாம் என்ற கருத்து இருந்தபோதிலும், இன்றைய விஞ்ஞானங்கள் பல்வகைப் புதுமைகளைக் கண்டு பிடிப்பதற்குப் பெரிதும் துணைபுரிவது இத்தொகுப்பு வழி அளவை முறையே.

மேற்கூறிய இருவகை முறைகளும் ஒருவகையில் சரிபார்க்கும் முறைகளே. நாம் கொள்ளுகின்ற முடிவு ,வடிவநிலைப் பொருத்த முடையதா? என்று சரிபார்த்தலைப் பகுப்புவழி அளவை முறையும், நம்முடைய முடிவு பொருள்நிலைப் பொருத்த முடையதா? என்று சரி பார்த்தலைத் தொகுப்புவழி அளவை முறையும் மேற் கொள்ளுகின்றன.

அளவையியலும் அறிவாராய்ச்சியியலும் :

அளவையியலின் பணி வேறு, அறிவாராய்ச்சியியலின் பணி வேறு. சிந்தனை, சிந்தனையின் செயலாகிய தீர்ப்பு ஆகியவைகளைப் பற்றிய ஆய்வுடன் நின்று விடுகிறது அளவையியல்-Logic. ஆனல், அறிவாராய்ச்சியியலின் பணி அதற்கு மேலேயும் செல்கிறது. அளவையியல் மேற்கொள்ளும் பணியானது அறிவாராய்ச்சியியற் பணியின் முதற்படி அல்லது உள்ளடங்கிய பணி என்றும் கூறலாம். அறிவாராய்ச்சியியலின் வினக்கள், அறிவு என்ருல் என்ன? அறிவின் இயல்பு யாது? நம்முடைய அறிவு எவ்வாறு அமைகிறது? அறிவுத் தோற்றத்துக்குரிய நிலைகள் யாவை? முடிவாக, அறிவின் ஆற்றல் தான் யாது? என்ற முறையில் அமைகின்றன. இவ்வினக்களுக்கு விடை காண்பதே அறிவாராய்ச்சியியலின் பணி.

முடிவுரை :

அறிவாராய்ச்சியியலோடு தொடர்புடைய மூன்று துறைகள் என எடுத்துக் கொண்ட முறையில், அறிவாராய்ச்சியியலுக்கும் உள்ளத்திற்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளைச் சென்ற இதழ்க் கட்டுரையிற் கண்டோம். வரிசை முறையில் அளவையியலுக்கும் (Logic) அறிவாராய்ச்சியியலுக்கும் (Epistemology) உள்ள இணைப்புக்கள் வேறுபாடுகள் ஆகியவைகள் இக்கட்டுரையில் விளக்கப் பெற்றன.

உத்தம சோழன் 14-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு, திருமாற்புரத்து இறைவனுக்கு திங்கள் தோறும் 108 குடங்கள் தேன், நெய், தயிர் கொண்டு அபிடேகம் செய்ய மதுராந்தகன் கண்டராதித்தனல் நிபந்தம் அளிக்கப் பட்டதாகச் செய்தி கூறுகிறது. கோப்பெருஞ்சிங்கன் திருமுது குன்றம் உடைய நாயனுர்க்கு நெய், பால் கொண்டு அபிடேகம் செய்ய 290 பசுக்கள் அளித்தான் என ஒரு கல்வெட்டுக் கூறுகிறது. சீர்காழி வட்டம் திருவெண்காடு கோயிலிலுள்ள வீரராசேந்திரன் காலக் கல் வெட்டுச் செய்தி :—சிவபெருமானுக்கு இவ்வரசன் பெயரால் அபிடேகம் செய்ய தேன், பால், பஞ்சகௌவ்யம் முதலிய பொருட்களைச் சிவலோக நாதன்என்பவர் அமைத்த தருமத்தை இக்கல்வெட்டுச் செய்யுள் கூறு கிறது.

" பூப்பாவைகோன் வீரராஜேந்திரர்க்காப் புராரிகல
தாப்பால் நவிற்றுஞ் சிவலோக நாதனென நறுந்தேன்
ஆப்போலோடை தொடும் வெண்காட்டற் கமைப்பித்தவறங்
காப்பானவனென்னை ஆளுடையானிக் கடலிடத்தே."

முதலாம் இராசராசன் தஞ்சைப் பெருவுடையாருக்கு ஆடியருள திரு மஞ்சன நீரில் இட பெருஞ்சண்பக மொட்டுக்கும், ஏலவரிசிக்கும், இலாமச்சத்திற்கும் கொடையளித்தான் எனத் தஞ்சைக் கல்வெட்டுக் கூறுகிறது.

வல்லவராயன் என்பவன் திருஆனைக்காவுடைய எம்பெருமான் கோயிலில் இடங்கை நாயகர் என்ற இடபவாகன தேவரையும் நம்பி ராட்டியாரையும் எழுந்தருள்வித்தான். இவர்களுக்கு திருமஞ்சனத் திற்காக நெல் கொடுக்க இசைந்து நிபந்தம் செய்து கொடுத்தான் என குலோத்துங்க சோழன் கால திரு ஆனைக்காக் கல்வெட்டுக் கூறுகிறது.

அரிகேசரி பராக்கிரம பாண்டியன் திருக்குற்றுலத்து சிவாலயத்தில் மண்டபம் அமைத்தான். இறைவனுக்கு மணிமுடி சூட்டி திருவிழா நடத்தினுன். வற்றுத அருவி வற்றியதால் திருமஞ்சனத்துக்குப் புனல் அருகில் எங்கும் கிடைக்காமையின் இறைவா மழை பெய்விப்பாயாக என வேண்டி வெகு தொலைவினின்று புனல் தருவித்து திருமஞ்சனம் ஆட்டினுன். இச்செய்தியைத் தென் காசிக் கல்வெட்டுக் கூறுகிறது.

முதலாம் இராசராசன் ஸ்ரீ திருவெண்காடுடையார்க்கு தாம் பிறந்த ஐப்பசி திங்கள் சதய நாளில் திருமஞ்சனம் ஆடவும், திருமஞ்சன மாடியருளும் பொழுது ஸ்ரீ முடியில் வைக்க பொற்பூ அளித்தான்.

உத்தம சோழன் 8-ஆம் ஆண்டு கோனேரிராஜபுரம் கல்வெட்டு கோயில்களுக்கான செலவுகள் என்னென்ன என்று கூறும் பொழுது இறைவனுக்கு அபிடேகம் செய்ய நீர் கொண்டு வருபவர்க்கும் செலவு செய்ய வேண்டும் எனக் கூறுகிறது.

ஆகவே நமக்கு நல்வாழ்வு நல்குகின்ற இறைவனுக்கு அபிடேக ஆராதனை செய்து மகிழ்ந்து போற்றி வழிபடுவோம்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்





# சந்தான குரவர் வரலாறு

டாக்டர் சொ. சிங்காரவேலன், எம். ஏ., பிஎச். டி.

ஈராண்டிற் சிவஞானம் பெற்றுயர்ந்த மெய்கண்டார்
இணைத்தாள் போற்றி
நாராண்ட பல்லடியார்க் கருள்புரிந்த அருணந்தி
நற்றுள் போற்றி
நீராண்ட கடந்தைநகர் மறைஞான சம்பந்தர்
நிழற்றுள் போற்றி
சீராண்ட தில்லைநகர் உமாபதியார் செம்பதுமத்
திருத்தாள் போற்றி.

## 1. திருக்கயிலாய பரம்பரை

**இன்பமும் துன்பமும் :**

இன்பமும் துன்பமும் இணைந்ததாக உள்ளது உலகம். மனத்தை மகிழ்விக்கும் தென்றலும் மணக்கின்றது; உள்ளத்தினை அச்சுறுத்தும் புயலும் சீறுகின்றது. கண்ணுக்கும் கருத்துக்கும் குளிர்ச்சி வழங்கும் தண்ணிலாப் பொழிகின்றது; உடலைச் சுட்டெரித்துக் கருக்கும் வெங்கதிரும் வழங்குகின்றது. அழகுக் காட்சி விரிக்கும் கோலமயிலும், இனிய

இசை வழங்கும் குயிலும், துள்ளியோடும் புள்ளிமான்களும், அன்பே-அறமே வடிவாம் ஆனினங்களும் காணும் கண்களுக்கு அமைதிக் காட்சி எடுத்து வழங்குகின்றன; கண்களாலேயே சுட்டெரிக்கும் வேங்கைகளும் கடுங்குரல் விரிக்கும் கூகைகளும், கண்ணுக்கு இன்னுமை தரும் கொடு விலங்குகளும், புலால் மணக்கும் உணவுடையனவாய்க் கொடுங்காட்சி வழங்குகின்றன. பார்க்கின்ற கண்களுக்கு நல்ல வண்ணமும், நுகர்கின்ற பொறிகட்கு இனியமணமும் உடைய அழகுப் பூக்கள் மலர்ந்து களிக்கூத்திடும் காட்சியும் உண்டு; தீ நாற்றம் விரித்து வெறுப்பூட்டும் தாவரங்களும் இல்லாமல் இல்லை. இவ்வாறு முரண்பாடுடையது போலத்திகழும் உலகம், பளிங்கினூடு புகுந்து விளங்கும் வெண்ணூல் போன்றதோர் ஒருமைப்பாடும் உடையதாவே திகழ்கின்றது. அதுவே படைப்பின் அடிப்படை; இறைமை எழில் உணர்வு; அதனை உணராதவர்க்கு இவ்வுலகம் பாழாக-வெற்றிடமாக-விளங்குகின்றது. உணர்ந்தவர்க்கோ உலகம் இனிதாகத் தோன்றுகின்றது. இந்த வேற்றுமை வியப்பாக இல்லையா? ஒருவர்க்குத் துன்பக் கேணியாகத் தோன்றும் உலகம் பிறிதொருவர்க்கு இன்பச் சுரங்கமாக இலங்குகின்றது என்றால் அதன் காரணம் யாது? ஒருவர்க்குத் தீமைகளே விளைந்து தழைக்கும் பொய்ம்மைக் காடாக விளங்கும் உலகம் மற்றவர்க்கு நன்மைகளே தழைக்கும் மெய்ம்மைப் புலமாக விளங்குகின்றது என்றால் அதன் அடிப்படை யாது? இந்த இருவேறு இயற்கைகளுக்கும் அடிப்படை இந்த ஒருமைப்பாடே ஆகும்.

### தெளிந்த சிந்தையும் தெய்வக் காட்சியும்

அனைத்திலும் உண்மை காண்பவர்க்கு உலகம் புரிகின்றது; அவர்களே உலகத்திடை நம்போல வாழ்ந்தும் சலனம் இல்லாமல்-தடுமாற்றம் இல்லாமல்-'பொய்ம்மான் வேட்டை'யிற் சோர்ந்துவிடாமல்-'இரண்டாட்டம்' ஆடி இதயம் சலியாமல் வாழத்தெரிந்தவர்கள். அவர்களுக்கு வேற்றுமையில் ஒற்றுமை விளங்குகின்றது: முரண்பாடுகளின் இடையில் முதல்வன் திருவடி தரிசனம் காணுகின்றார்கள். அதனால் மேடு பள்ளங்கள், ஒளியும் இருளும் அவர்களது அகத்தையும் புறத்தையும் தாக்க இயலவில்லை. 'இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை' என்று வீறு கொண்டு செம்மாப்பிற் செந்தமிழ்க் கவிமலர் சூட்டக்கூடிய பெரும்பேறு பெற்றவர்கள் அவர்கள். 'கொடிய இந்த உலகத்தில் இனிய விழுப்பொருளை அறிந்து பற்றிக் கொள்ளவேண்டும் இதன் இயல்பை உணர்ந்தவர்கள்' என்று சங்கக் கவிஞன் பாடும் வரிகளுக்கு இப்போது பொருள் புரிந்துவிட்டாற் போல் தோன்றுகின்றது அல்லவா ?

"இன்னுதம்ம இவ்வுலகம்
இனிய காண்கிதன் இயல்புணர்ந்தோரே"

ஆம்; இந்தக் கவிதைக்குப் பொருள் உணர்ந்து கொண்டால் உலகப் படைப்பின் அடிப்படை விளங்குகின்றது; அதுமட்டுமோ? முரண் பாடுள்ள உலகம் இந்தத் தெளிந்த சிந்தைக்குத் தெய்வக் காட்சியாய் விரிகிறது.

இந்த உலகின் இயல்பை உள்ளவாறு புரிந்து கொள்ளாத அறியாமை உயிர்க்குலங்களின் சொத்தாக உள்ளது. இந்தத் தீய இயல்பை 'மருள்' என்று திருவள்ளுவர் கூறுவர். இதனாலேயே மெய்ப்பொருள் அல்லாதவற்றை மெய்ப்பொருள் என்றும், பொய்ப் பொருளை மெய்ப்பொருள் என்றும் துணிகின்ற நிலை உளதாகின்றது.

"பொருளல் லவற்றைப் பொருளென் றுணரும்
மருளானும் மாணாப் பிறப்பு"

இந்த அறியாமையை-உலகை உணர்ந்துகொள்ளப் பெருந்தடையாக உள்ள மாயத்திரையை உணர்த்தி அறிவொளி கூட்டுபவனே ஆசிரியன் என்கின்றன தமிழ்நூல்கள். ஆசிரியன் மாசு கழுவும் திருப்பணியை மேற்கொள்ளுகின்றான். ஞானம் பிறக்க, மெய்யுணர்வு விளைய ஆசிரியன் அருந்துணைவனாக உள்ளான். ஆசிரியன் அருளால் மாணவனுடைய மனமாசு நீங்குகின்றது; இறைவனுடைய திருவடியைப் பரவும் மெய்யுணர்வு தோன்றுகின்றது. இதனையே குருவருள் என்று சாத்திர நூல் சாற்றுகின்றது.

குருவருள்—கயிலாய பரம்பரை :

குருவின் திருமேனி காணுதலால் தெளிவு உண்டாகும்; திருவார்த்தை கேட்டலாலும், திருவுருச் சிந்தித்தலாலும் தெளிவு உண்டாகும் என்று திருமந்திரம் தெளிவுறுத்துகின்றது. இந்தத் தெளிவு உயிர்க்குலம் திருந்திடவும், இறைவன் இணையடிநீழலில் சேர்ந்து இன்புற்றிடவும் துணையாகின்றது. இந்தக் குருமரபு சைவசித்தாந்த நெறியில் திருக் கயிலாயத்திலிருந்து தொடங்குகின்றது. எல்லாம் வல்ல இறைவன் சீகண்ட பரமசிவனாக நின்று திருநந்திதேவர்க்கு உணர்த்திய ஞானம் திருக்கயிலாயத்து மாமுனிவோர் வழி மண்ணுலகிற்கு வந்து நலம் பெருக்குகின்றது. இதனையே திருக்கயிலாய பரம்பரை என்று கூறி மகிழ்கின்றோம். சனற்குமாரர், சத்தியஞான தரிசினிகள், பரஞ்சோதி யார் ஆகிய மூவருடன் திருநந்திதேவரையும் சேர்த்து நம் ஞான குரவர்கள் என்று கூறுவர். இவர்கள் அகச்சந்தான குரவர்கள் என்று அழைக்கப் பெறுவர். இவர்களுள் பரஞ்சோதியார் வழியே மெய்ஞ் ஞானம் மண்ணுலகிற்கு வந்தது. திருநந்திதேவரின் வழியே இறையருள் மண்ணுலகிற்கு வந்த வண்ணம் இது.

**சந்தான குரவர் பரம்பரை :**

சீகண்ட பரமசிவன்

திருநந்தி தேவர்

- சனகர்
- சனந்தனர்
- சனாதனர்
- சனற்குமாரர்
  - சத்தியஞானதரிசினிகள்
  - பரஞ்சோதி மாமுனிகள்
  - மெய்கண்டதேவநாயனார்
  - அருணந்தி தேவநாயனார்
  - மறைஞானசம்பந்த தேவநாயனார்
  - உமாபதி தேவநாயனார்
  - அருணமச்சிவாயர்
    - சித்தர் சிவப்பிரகாசர் முதலியோர்
    - காழிக்கங்கைமெய்கண்டார் முதலியோர்

# 2. மெய்கண்டார் வரலாறு

## பெற்றோர்

தமிழ்நாட்டின் கண் தெய்வமணம் கமழும் தலங்கள் பல உண்டு. 'நடுநாடு' என்று கூறப்பெறும் பகுதியில் எண்ணற்ற சிவத்தலங்கள் இருந்து அருள் பெருக்குகின்றன. இந்நடுநாட்டின் கண் நிவா என்ற ஆறு பாய்ந்து வளம் பெருக்குகின்றது. இந்த ஆற்றின் வடகரையில் பெண்ணாகடம் என்னும் நல்லூர் உள்ளது. இதனைக் 'கடந்தை மாநகர்' என்றும் கூறுவர். இத்தலம் அருந்தமிழ் வளர்த்த அருளரச ராம் நாவரசர்க்கு இறைவன் மூவிலைச் சூலம் பொறித்த முதன்மை உடையது. இத்தலத்தின் கண் காராளர் எனப்படும் வேளாளர் குலத்தில் அச்சுதக் களப்பாளர் என்னும் பெரியோர் ஒருவர் வாழ்ந்துவந்தார். அவர் பெருஞ்செல்வர், எல்லாச் செல்வமும் குறைவறப் பெற்றிருந்த அவர்க்கு மக்கட் செல்வம் மட்டும் இல்லை. களப்பாளர் நெஞ்சிற் கவலைபடர்ந்தது. 'வழிவழியாக என் குடி விளங்கச் செய்ய ஒரு மகவு வேண்டுமே; பிள்ளையில்லா வாழ்வு பெரும்பலன் இல்லாததாயிற்றே' என்று நொந்தார். அறிவுநலமும் வாய்க்கப் பெற்ற நல்லோர் அவர் ஆதலின் இறைவன் திருவருளை அடைதற்கான எண்ணம் கொண்டார்.

## குருவருளும் திருமுறையும் :

திருவருளை அடைதற்குச் சரியான வழி குருவருளே ஆகும்; என்ற உண்மை தெளிந்த களப்பாளர் தம் ஊர்க்கு அண்மையில் இருந்த திருத்துறையூர் என்னும் தலத்திற்குச் சென்றார்; அங்குத் தம் குலகுருவாக எழுந்தருளியிருந்த அருணந்தி சிவாசாரியர் என்னும் சகலாகம பண்டிதரை அடைந்தார். அவர் சிறந்த பெரும் புலவர். எல்லா ஆகமங்களினும் மிக்க அறிவும் உடையவர். நல்லடியார். இறைவன் திருவருளில் அழுந்திய நம்பிக்கை உடையவர். அதனுடன் சைவ சமயப் பெருங்குரவர்கள் திருவாக்குகளில் ஈடுபட்ட கருணை உருவினர். சைவத் திருமுறைகளைத் தம் உறுதுணையாகக் கொண்டொழுகும் இயல்பினர். எதற்கும், என்றும் திருமுறைகள் துணைபுரிந்து வழிகாட்டும் என்னும் உண்மையை உணர்ந்த இயல்பினர். தொண்டர்நாதனைத் தூதிடை விடுத்தது தெய்வத் திருமுறை; முதலை உண்ட பாலனை அழைத்தது தெய்வத் திருமுறை; அரவின் விடத்தை பாற்றியது தெய்வத் திருமுறை; தென்னன் உடற்பிணி தீர்த்தது தெய்வத் திருமுறை: ஆதலின் திருமுறைகள் எல்லாம் வல்ல இறைவன் திருவருளால் நாம் வாழக் கிடைத்த பேரருட் கருவூலங்கள் என்ற உறுதி அவர்க்குண்டு. தம்முடைய செயல் எதற்கும் திருமுறையை—'எனதுரை தனதுரை'

என்று கவுணியர் குலக்கொழுந்து நவின்ற இறைநிலை அமுதத்தை, முன்னிட்டே செயற்படுவார் அச்செம்மலார். தம் சீடர் அச்சுதக் களப்பாளர் மக்கட் செல்வம் வேண்டி மனம் தளர்வது அவ்வாசிரியர் அருள் உள்ளத்தை வாட்டியது. இனிய அறிவும் பண்பு நலமும் வாய்ந்து, திருவும் தெள்ளிய உணர்வும் பொருந்திய களப்பாளர்க்குத் துணைபுரிந்திட வேண்டுமாயின் அதற்கும் தம் வழிபடு கடவுளாம் சமய குரவர் திருவடிகளே துணையாம் என்று கொண்டார் அத்தூயவர்.

பாலறுவயார் ஆணை :

தமிழ் மறையாகிய தேவாரத் திருநூலைத் தம்முன் கொணர்வித்தார். திருவருளையும் குருவருளையும் உளமார எண்ணிக் கொண்டு, தொழுது தமிழ்மறையிற் கயிறு சார்த்தினர். கயிறு படிந்த இடம் விரிந்தது. ஆம்; 'தாவில் சராசரங்கள் எல்லாம் சிவம் பெருக்கும் பிள்ளையார்' என்று புராணம் உரைக்கும் திருஞானசம்பந்தப் பெருமான் திருப்பதிகங்களில், திருவெண்காட்டுப் பதிகம் வந்தது; அதிலும், 'மகப்பேறு' உறுதியாக உண்டு' என்று உறுதிப்படுத்தும், 'பேயடையா பிரிவெய்தும்' என்ற திருப்பாட்டு வந்தது. மெய்ம்மயிர் சிலிர்த்துக் கண்ணீர் வார சிவாசாரியார் சீடர்க்குத் திருவருள் இருந்தவாற்றை எடுத்துரைத்து மகிழ்ந்தார். திருஞானசம்பந்தர் அருளிய இரண்டாம் திருமுறையில், சீகாமரப் பண்ணில் அமைந்த அத்திருப்பாட்டின் அழகுறு வடிவம் இது.

"பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினே டுள்ளம்நினை
வாயினவே வரம்பெறுவர் ஐயுறவேண் டா; ஒன்றும்
வேயனதோ ளுமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையார் அவர்தம்மைத் தோயாவாம் தீவினையே."

திருஞானசம்பந்தரே நேரே எழுந்தருளி நின்று உரைக்கும் வகையில் இத்திருப்பாடற் பொருள் இருத்தல் உணரத்தக்கதாகும். "பேய்கள் அடைய மாட்டா; பிரிந்து ஓடிடும்; பிள்ளைப் பேறு எய்துவதோடு, உள்ளத்தே நினைத்த வெல்லாம் கைகூடிடும் வரம் பெறுவர்; சிறிதும் ஐயுற வேண்டா. இது பேருண்மை ஆகும். வேய் போன்ற தோள் உடைய உமையம்மையை ஒரு பங்கின் உடைய பெருமானுடைய திரு வெண்காட்டு முக்குள நன்னீரில் தோய்கின்ற தொழிலை உடையாரைத் தீயவினைகள் சென்று தோய்ந்திடல் என்றும் இல்லை" என்று பாடற் பொருள் விளக்கிடக் கண்ட அருணந்தியார்க்கும், அச்சுதர்க்கும் மெய்ப் பாடுகள் பல உண்டாயின. "எல்லாம் தரும் திருமுறை இனிய நெறி காட்டும்" என்ற உண்மையை உலகம் உணர்ந்திடவே இறையருள் இந் நிகழ்ச்சியை அங்கு நடத்துவித்தது என்று கருதுதல் தவறாகாது.

அன்றியும் சிவநெறி பேணிட ஒரு மகவு வேண்டும் என்று வருந்தித் தவமிருந்து, சிவபாத இருதயர், 'வேதநெறி தழைத்தோங்கவும், மிகுசைவத்துறை விளங்கிடவும், பூதபரம்பரை பொலிந்திடவும்" பெற்ற

பாலருவாயர் திருவாக்கே வந்திடுதலால், 'ஞானத்தின் திருவுருவாக' அப்பெருமான் திருவருளால் தோன்றியருள்வார் என்ற ஆழ்ந்த நம்பிக்கையும் அச்சுதக் களப்பாளர் உள்ளத்தே தோன்றிற்று.

அருணந்தியார் தம்மாணுக்கரை நோக்கி, "நீர் உம்முடைய துணைவியாரோடும் திருவெண்காடு சென்று, அங்கு முக்குளத் தீர்த்தத்தே மூழ்கிப் பெருமானையும் வித்தியா நாயகி என்ற பெயருடைய அம்மையையும் அடிபணிந்து ஏத்தி வாழ்வீராக. அதனுடன் அடியார் வழிபாடும் அன்புற இயற்றுக. பல அறங்களும் விழைந்து செய்து அங்கு வாழ்ந்திடில், உலகங்கள் அனைத்திற்கும் உரிய 'ஞானநல் உருப் புதல்வனைப் பெறுவீர். இதற்குச் சிறிதும் ஐயம் இல்லை. திருமுறையிலேயே, 'ஐயுற வேண்டா ஒன்றும்' என்று உண்மை உணர்த்தப் பட்டுள்ளமை உணர்வீராக' என்று கூறியருளினர். தம் குலகுருவாகிய சகலாகம பண்டிதர் அன்பின் திறத்தையும், திருமுறை வாக்கில் அப்பெரியோர்க்குள்ள ஈடுபாட்டையும், இறையருள் திருமுறை வாக்கின் வழியே எய்தப் பெற்ற வள்ளன்மையையும் எண்ணி எண்ணி வியந்தார் களப்பாளர். தம் ஞான ஆசிரியர் நல்லாணைப் படியே திருவெண்காடு சென்றிடப் பணிந்து விடை கொண்டார்.

### திருவெண்காட்டில் வழிபாடு :

சோழநாட்டில் திருவெண்காடு திருவருள் பெருகும் திருத்தலம். மூர்த்தி, தலம், தீர்த்தம் மூன்றாலும் சிறந்த அத்திருத்தலத்தினை அச்சுதக் களப்பாளர் தம் வாழ்க்கைத் துணைவியாருடன் வந்தடைந்தார். வெள்ளானை வழிபட்டுப் பேறு பெற்ற தலம் இது என்ற வரலாற்றுச் சிறப்பு உணர்ந்து வழிபட்டு இன்புற்றார். ஞாயிறு, திங்கள், தீ ஆகிய மூன்றன் பெயரால் வழங்கும் முக்குளத்தில் துணைவியாரோடு மூழ்கியெழுந்து வெண்காடரை உமையம்மையோடும் வழிபட்டார் சைவசமய குரவர்களாகிய மூவர் தமிழும் சூடிய பெருமிதத்துடன் அருள் மணக்க வீற்றிருக்கும் அண்ணலார் வழிபாட்டின்பம் பெரிதும் இவர்க்கு வாய்த்தது. 'சக்கரம் மாற்கீந்தானும் சலந்தரனைப் பிளந்தானும், அக்கு அரைமேல் அசைத்தானும்; அடைந்து அயிராவதம் பணிய மிக்கு அதனுக்கு அருள் சுரக்கும் வெண்காடு உடையான்' என்றும், 'வினைகளைத் துரத்தும் முக்குளம் உடையான்' என்றும் பாலருவாயர் பாடிய பாடல் களப்பாளர் நெஞ்சைக் கனிவித்திருத்தல் கூடும். 'விண்ணமர் பொழில் கொள் வெண்காடு மேவிய அண்ணலை அடிதொழ அல்லல் இல்லையே" என்ற ஆளுடைய பிள்ளையார் அருள்மொழி களப்பாளர் மனத்து வழிபாட்டின் உறுதியை விளைத்திருத்தல் கூடும். 'ஊன் நோக்கும் இன்பம் வேண்டி உழலாமல் வான் நோக்கும் வழி நிற்க வேண்டுமென்று எண்ணினால், வையகத்தீர்! திருவெண்காடடைவீராக' என்று கூறாமல் நெஞ்சிற்குக் கூறுவாராய் வழிகண்டுரைத்த வாக்கரசர் உரை அச்சுதர் உள்ளத்தில் ஆராத இன்பத்தை அடைவித்திருத்தல் கூடும். 'பண்ணில்

# காவிரி

" மயிலைவாணன் "

காவிரி போற்றுதும் காவிரி போற்றுதும்.

"கொண்டல் குமுறும் குடகிழிந்து மதகுஉந்தி அகில் கொண்டு நுரைமண்டி வருநீர்த்திரைகளால் கனகமும் தரளமும் சிதறுவதும், தன்னில் நீராடியவருக்கும் தன் கரைகளில் வாழ்பவருக்கும் மாத்திரமேயன்றி தன்காற்றுப்பட்டுச் செல்லுமிடம் அவ்வளவிலுமுள்ளவருக்கும் முத்திதரவல்ல பொன்னிமாநதி" என்று காவிரியாற்றைப் போற்றிப் புகழ்ந்தார் புலவர் பெருந்தகையார். தென்னாட்டை வாழ்விக்க வந்த வளநதிகளில் ஒன்று காவிரி. தெய்வநதி என்றும் போற்றப்பெறும் பெருமையுடையது. இதற்கு, காவிரி, பொன்னி, தென்னாட்டுக் கங்கை என்ற பெயர்களும் உண்டு. "தண்ணீரும் காவிரியே தார்வேந்தன் சோழனே மண்ணாவதும் சோழ மண்டலமே" என்று இதன் புகழ் விதந்தோதப் பெறுகிறது. "காவிரி தென்பெண்ணை பாலாறு தமிழ் கண்டதோர் வையை பொருநை நதி" என்று பாடும் போது காவிரியை முதலில் வைத்துப் பாடியிருக்கிறார் பாரதியார். இந்த ஆறு குடகு நாட்டில் உற்பத்தியாகி மைசூர், கொங்கு, சோழ நாடுகளின் வழியே ஓடி காவிரிப் பூம்பட்டினத்தில் (பூம்புகார்) கடலொடு கலக்கிறது. இதன் நீளம் 475 கல். மேற்குத் தொடர்ச்சி மலையில் சையமலை அல்லது பிரமகிரி என்ற மலையில் நீர் ஊற்றுள்ள சிறு குளத்திலிருந்து புறப்படுகிறது. அந்த இடத்தைத் தலைக்காவிரி என்பர். அங்கு காவிரியம்மனின் திருக்கோயில் ஒன்றும் இருக்கிறது.

காவிரியின் தோற்றத்தைப் பற்றிப்புராணக் கதைகள் உண்டு இந்திரன் சீகாழியில் அமைத்த நந்தவனத்திலுள்ள செடி கொடிகள் மழையின்மையால் வாடின. அவன் விநாயகரை வேண்ட, அவர் சையமலையில் தவம் செய்து கொண்டிருந்த அகத்தியர் கமண்டலத்திலுள்ள நீரை காக உருவம் கொண்டு கவிழ்த்தார். அந்த நீர் ஆறாகப் பெருகியது; நந்தவனத்தைச் செழிக்கச் செய்தது. காகம் கவிழ்த்த நீர் ஆறாக விரிந்து ஓடுவதால் கா விரி எனப்பெயர் வந்தது. இந்திரன் நந்தவனம்-கா வளம்பெற விரிந்ததால் காவிரி என்னும் பெயர் போந்தது என்பாருமுளர். ஆக்கினேய புராணத்தில் கவேர முனிவரின் மகள் புண்ணிய நதியாக ஓடித் தந்தைக்கு நற்கதி நல்கினாள், அதனால் காவேரி என்ற பெயர் ஏற்பட்டது என்று கூறப்பெற்றிருக்கிறது.

சைய மலையில் புறப்பட்ட அருவி, பாகமண்டலத்தில் சிற்றாறாக உருப்பெறுகிறது. இதனுடன் கனகா, ஏமாவதி, கப்பினி, சுவர்ணவதி, ஷிம்ஷா, அர்க்காவதி, பவானி, நொய்யல், அமராவதி, என்ற ஆறுகள் சேர்ந்து திருச்சிராப்பள்ளிக்கு அருகில் அகண்ட காவேரி ஆகிறது. காவிரியிலிருந்து கொள்ளிடம், மஞ்சளாறு, வெண்ணாறு, வெட்டாறு, கடலாழி, வீரசோழன், திருமலைராஜன், முடிகொண்டான், அரிசிலாறு, ஓடம் போக்கி, கோரையாறு, பாமணியாறு முதலியவை பிரிந்து, தஞ்சை மாவட்டம் முழுவதிலும் பரந்தோடி வளம் பெருக்கச் செய்கின்றன. அதிக அளவு தண்ணீர் மக்களுக்குப் பயன் பெறச் செய்வது உலகிலேயே காவிரி ஒன்று தான் என்று அறிஞர் கூறுகின்றனர்.

காவிரி மூன்று இடங்களில் பிரிந்து கூடி, தீவுகளை ஏற்படுத்தியிருக்கிறது. அதை அரங்கம் அல்லது துருத்தி என்பர். சீரங்கப்பட்டினத்தில் ஆதிரங்கம் என்றும், சிவசமுத்திரத்தில் மத்தியரங்கம் என்றும் திருச்சிராப்பள்ளியில் திருவரங்கம் என்றும் கூறுவர். சிவசமுத்திரத்தில்

ககனசுகி, பார்சுகி என்று இரண்டாகப் பிரிந்து 250 அடி உயரத்திலிருந்து விழுகிறது. அந்த நீர் வீழ்ச்சியின் காட்சி மாட்சிமையுடையது. குறுகிய இருமலைச்சரிவுகளிடையே பன்னிரண்டடி அகலத்தில் ஓடுகிறது. ஆடுதாண்டும் காவிரி அல்லது மேகதாடு என்று அதைக் கூறுகின்றனர். கொங்கு நாட்டில் புகும்போது ஓகேநகல் என்ற இடத்தில் நீர்வீழ்ச்சியாக விழுகிறது. இது பற்றிய கதை ஒன்று உண்டு. வழக்கமாக ஓடி வந்த காவிரி இந்த இடத்தில் ஒரு சமயம் ஒரு துவாரத்தில் புகுந்து மறைந்தது. அதற்கப்பால் தண்ணீர் வரவில்லை. காவிரியில் தண்ணீர் வராமலிருந்ததைப் பார்த்த சோழ மன்னன் காவிரிக் கரையோரமாகவே குதிரையில் சென்று ஒகேநகல் அடைந்தான். தண்ணீரெல்லாம் ஒரு பொந்துக்குள் போய் மறைவதைப் பார்த்தான். அதற்கு என்ன செய்யலாம் என்று அங்கிருந்த முனிவர் ஒருவரைக் கேட்டான். அவர் "யாரேனும் ஒரு மனிதன் தண்ணீருக்குள் விழுந்து அந்த துவாரத்தை அடைத்து விட்டால் தண்ணீர் முன்போல் ஓடும்" என்றார். உடனே அரசன் அவர் சொன்னபடியே விழுந்து துவாரம் அடைந்து போகும்படி செய்தான். மக்களுக்காக உயிர்த்தியாகம் செய்த மன்னன் பெருமையை என்னென்று கூறுவது !

இனி, காவிரியில் கிருஷ்ணராஜசாகரம், மேட்டூர் என்ற இரண்டு நீர்த்தேக்கங்கள் உள்ளன. மற்றும் மேலணை, கல்லணை, கீழணை என்ற மூன்று அணைகளால் ஆற்றின் பாசனத்தை முறைப்படுத்தியிருக்கிறார்கள். கல்லணை கட்டிய சோழ மன்னனின் மதிநுட்பத்தை இக்காலப் பொறியியல் அறிஞரும் வியந்து பேசுகின்றனர்.

புலவர்களும் அடியார்களும் இவ்வாற்றைப் பலபடப் பாராட்டியுள்ளார்கள். மணிமேகலை ஆசிரியர், "சோழர் தம்குலக்கொடி", "தண்டமிழ்ப் பாவை" என்று கூறுகிறார். இளங்கோவடிகள் "தண்ணறுங் காவிரித் தாது மலி பெருந்துறைப் புண்ணிய நன்னீர்" என்று இதன் தெய்வத் தன்மையைப் போற்றுகிறார். அப்பர் "பொன்னி தீர்த்தம்" என்கிறார். சம்பந்தர் இதில் மூழ்குவோர் இடர்கெடும் என்று கூறுகிறார். சுந்தரர் "எண் திசையோர்களும் ஆட வந்திங்கே சுழிந்திழிகாவிரி" என்றுரைக்கிறார். கம்பர் "தெய்வத்திருநதி" என்பார். "கங்கையிற் புனிதமாய காவிரி" என்பர் தொண்டரடிப் பொடியாழ்வார். காமாட்சிதேவியின் கருணைப் பெருக்குபோல காவிரி ஓடுகிறது என்று சேக்கிழார் அருளுகிறார்.

காவிரியின் இருகரைகளிலும் பவானி, பாண்டிக் கொடுமுடி, திருப்பராய்த்துறை, உறையூர், திருவரங்கம், திருவானைக்கா, திருச்சிராப்பள்ளி, திருவையாறு, சுவாமிமலை, கும்பகோணம், திருவிடைமருதூர், மாயூரம் முதலிய பல தலங்கள் உள்ளன

தைப்பொங்கல் அன்று திருவையாற்றிலும், ஐப்பசி மாத முழுவதும் மாயூரத்திலும், ஆடி, தை அமாவாசைகளில் காவிரிப் பூம்பட்டினத்திலும் திரளான மக்கள் கூடி நீராடுவர். அங்குள்ள கோயில்களிலிருந்து பஞ்சமூர்த்திகள் எழுந்தருளித் தீர்த்தம் கொடுப்பர். இன்னும் ஆடி மாதம் பதினெட்டாம் நாள் ஆடிப்பெருக்கு என்ற விழாவில் மக்கள் காவிரியில் நீராடி மகிழ்வது ஒரு தனிப்பெருங்காட்சி.

"கல்லும் காவிரியும் புல்லும் பூமியும் உள்ளவரையில் நீ வாழ்க" என்று வாழ்த்துவது நம் நாட்டு மரபு. இத்தகைய பெருமை, தொன்மை வளமை, தெய்வத் தன்மை அனைத்தும் பொருந்திய காவிரியாற்றில் நீராடி நாம் எல்லாம் புனிதமடைவோமாக.

## சென்ற திங்களிதழ் சமய பொது அறிவு வினுக்களுக்கு விடைகள்

8. கோயில் அமைப்பில் கோபுரம், பிரகாரம், பலிபீடம், கொடி மரம், நந்தி, கர்ப்பக்கிரகம் இவற்றின் தத்துவங்கள் என்ன?

கோபுரம்: தூலலிங்கம், இறைவன் பாதம் ஆகப்பாவித்து வணங்க வேண்டும். எங்கிருந்தும் வழிபடலாம். உயர்ந்த எண்ணத்தை எழுப்பும்.

பிரகாரம்: பிரகாரங்கள் அன்னமயம், பிராணமயம் முதலிய ஐந்து கோசங்களேயும் குறிப்பன. இவற்றைக் கடந்தால் இறைவனின் அண்மையை அடையலாம் என்பதை உணர்த்துகிறது.

பலிபீடம்: நம்மிடமுள்ள காயக்குரோதாதிகளேப் பலியிட வேண்டுமென்பது. "துள்ளுமறியா மனத்தைப் பலி கொடுத்தேன்" என்பர் தாயுமானுர்.

கொடிமரம்: இறைவனுக்கும் ஒரு கொடியுண்டு; ஆன்ம வெற்றியை உணர்த்தும். சூக்குமலிங்கமாகப்பாவிக்க வேண்டும்.

நந்தி: ஆன்மாவைக் குறிக்கும். ஒன்றிய மனத்துடன் ஒரு முகமாக வழிபடவேண்டும் என்பதைக் குறிக்கிறது.

கர்ப்பக்கிரகம்: அனேத்தையும் படைத்ததற்குக் காரணமான மூலப் பிரகிருதியின் இடம். உருவமில்லாத கடவுள் உருவத்துடன் காட்சியளிக்கிருர்.

9. பாடல் பெற்ற பதிகள், மங்களா சாசனம் செய்த திவ்விய தேசங்கள் இவைபற்றித் தெரிந்ததை எழுதுக.

அப்பர், சம்பந்தர், சுந்தரர் இம்மூவரும் பாடிய தலங்களேப் பாடல் பெற்ற பதிகள் என்பர். இவை 27ு உள்ளன. பன்னிரண்டு ஆழ்வார் களால் திவ்வியப்பிரபந்தம் பாடப் பெற்றவற்றை மங்களாசாசனம் பெற்ற திவ்விய தேசங்கள் என்பர். இவை 108 திருப்பதிகள்.

10. தென்னுட்டை வாழ்விக்க வந்த சான்ருேர்கள்-ஆழ்வார்களும் நாயன் மார்களும்-காரணங் காட்டி விவரிக்க.

தென்னுட்டில் பௌத்த சமண சமயங்களில் ஆதிக்கத்திஞல் கி.பி. மூன்ரும் நூற்ருண்டு முதல் ஐந்தாம் நூற்ருண்டு வரையில் சைவ வைணவ சமயங்கள் வலியிழந்து நின்றன. அதை இருட்காலம் என்றும் களப்பிரர்காலம் என்றும் வரலாற்று ஆசிரியர் கூறுவர் மக்கள் சமயக் குழப்பத்தில் அல்லலுற்று வாழ்ந்தனர். ஐந்தாம் நூற்ருண்டுக்கும் பத்தாம் நூற்ருண்டுக்குமிடையே நம்முடைய நெறிப் பாடல்களேப் பாடி, கோயில் வழிபாட்டில் மக்களே ஈடுபடுத்தி நல்வழிப் படுத்திஞர்கள். அவர்களின் அருளிச் செயல்களால் தான் நம் சைவ வைணவ சமயங்கள் இப்போதிருக்கும் நிலேயிலாவது நிற்க நேர்ந்தது.

"மணவழகன்"

Edited, Printed at Peravai Achakam and Published by A. Narayanaswamy, B. A., for the Tamil Nadu Deivika Peravai at No. 9, Maharaja Surya Rao Road, Alwarpet, Madras-600018.